# அக்கினிக் கவசம்

தலைவன்குறிச்சி ரணவீர முத்துமாரியம்மன் கோவில் ஒரு முப்பது மைல் வட்டாரத்துக்கு மிகவும் பிரசித்தி பெற்றது. ஐந்து வயதுக் குழந்தைகளுக்கும் அம்மனின் மகிமைகள் கரதலபாடமாகத் தெரியும். அந்தப் பக்கத்து கிராமங்களுக்கெல்லாம் அந்த முத்துமாரி ஒரு தெய்வம் மட்டுமல்ல. வழக்குத் தீர்க்கும் நீதிபதியும், நோய் தீர்க்கும் வைத்தியரும், திருடனைப் பிடித்துக் கொடுக்கும் உளவதிகாரியும்கூட அவள்தான். இப்படிப் பலவிதமான கைங் கரியங்களைக் கிராமவாசிகளுக்குச் செய்து வந்ததோடு மற்ற ஊர் மாரியம்மன்களைப் போலப் பருவ காலத்தில் மழை பெய்யச் செய்வது, மழையை நிறுத்தி, மக்கள் கைவிட்ட பக்தியை மீண்டும் கைகொள்ளச் செய்வது, கனவில் வந்து சிற்சில காரியங்களைச் செய் அல்லது செய்யாதே என்று சொல்லுவது போன்ற மாமூல் காரியங்களையும் செய்து வந்தாள்.

தீராத சரும நோய்களெல்லாம் அம்மனுடைய கோவிலுக்கு வந்து பிரார்த்தனை செலுத்தியதும் தீர்ந்திருக்கிறதாம். கண் போனவனுக்குக் கண்கொடுத்தது, பிள்ளையில்லாதவனுக்குப் பிள்ளை கொடுத்தது போன்ற வரங்களெல்லாம் இந்த அம்மனைப் பொறுத்த வரையிலும் அப்படி ஒன்றும் பிரமாதமான காரியங் களல்ல. வெட்டிய கை முளைத்தது, செத்தவன் பிழைத்தான் என்பன போன்ற செய்திகளே உண்டு. இவையெல்லாம் வைத்திய

சாதனைகள். இவ்வளவு கருணைக்கடலான முத்துமாரி, கோபம் வந்துவிட்டாலோ தன் பெயருக்குத் தக்கபடி ரணவீர முத்துமாரி யாகவே மாறிவிடுவாள். ஈவிரக்கம் காட்டவே மாட்டாள். ஆட்டையோ கோழியையோ பலி கொடுத்துத் தப்பித்து விடுவதென்பது இவளிடத்தில் நடக்காத காரியம். கேவலம், ஒரு ரூபாயை மோசம் செய்ததற்காக அம்மன் சந்நிதியில் பொய்ச் சத்தியம் செய்திருந்தாலும், குடும்பத்தோடு காவு கொடுத்தாக வேண்டும். அம்மனுக்கு அபசாரம் செய்து கண் இழந்தவர்கள் பலர்; வாய் பேச முடியாமல் ஊமையானவர்கள் பலர்; வைசூரியால் மாண்டவர்கள் பற்பலர். சில குடும்பங்களில் பரம்பரையாகப் பைத்தியம் பிடித்தவர்கள் பிறப்பதற்கும் அம்மனின் கோபமே காரணம். அதனால் அம்மன் முன்னிலையில் கற்பூரத்தை அணைத்துப் பொய்ச் சத்தியம் செய்வதற்குப் பதிலாக, திருடிய ஒரு ரூபாயைக் கொடுத்துவிடுவது மேல்; கொடுக்க மனம் வராவிட்டால், தானாக ஆற்றிலோ குளத்திலோ குதித்து சீவனைப் போக்கிக் கொள்ளலாம். அம்மனின் கோபத்துக்கு மட்டும் ஆளாகிவிடக் கூடாது.

இவ்வளவு மகாசக்தி வாய்ந்த துடியான தேவதையை சுற்றுக் கிராமவாசிகள் எல்லோரும் தொட்டதற்கெல்லாம் நினைத்துக் கொள்ளுவார்கள் அற்ப உதவிகளையெல்லாம் செய்யும்படிக் கோரி மானசீகமாகப் பிரார்த்திப்பார்கள். எதிரிகளை பயமுறுத்தும் போது, "தலைவன்குறிச்சி முத்து மாரியம்மன் இருக்கிறாள்டா, அவள் பார்த்துக்கிடுவாள். ஒன்னை நான் ஒண்ணும் செய்ய வேண்ணு நெனைச்சிக்கிட்டு ஆட்டம் போடாதே" என்று எச்சரிப்பார்கள். இப்படி, கண்கண்ட கடவுளாக, கலியுகப் பிரசன்னமாக விளங்கும் அம்மனுக்கும்கூட உள்ளூர் வாசிகள் அந்த வருஷம் பொங்கலிட்டுக் கொடை நடத்தத் தவறிவிட்டார்கள். ஆடு வெட்டு, புதுப்பானைப் பொங்கல், வில்லடி, கரக அட்டம், பம்பை

மேளம், சேற்றாண்டி வேஷம், முளைப்பாரி, மஞ்சள் நீராட்டம் இப்படி விமரிசையாக ஆண்டாண்டுக் காலமாக நடைபெற்று வந்த-ஊர்ச்சாத்திரை என்றும், கொடை என்றும், பொங்கல் என்றும் சொல்கிற-திருவிழா அந்த வருஷம் நடைபெறவில்லை.

ஊருக்குள் கட்சிப் போராட்டங்கள் தீவிரமாகி, சாமியை மறந்துவிட்டார்கள். கட்சி என்றால் அரசியல் கட்சியல்ல. தெற்குத் தெருவாசிகளுக்கும் வடக்குத் தெரு வாசிகளுக்கும் இடையே ஒரு கட்சி. ஒரு பெண் விஷயமாக மூண்ட சண்டை, இரண்டு குடும்பங்களின் கலகமாக வளர்ந்து, கடைசியில் ஊரை இரண்டாக்கும் கட்சிப் போராட்ட மாக விஸ்வரூபம் எடுத்துவிட்டது. ஆடியில் மேல்காற்று கிளம்பியதும் மூலைக்கு மூலை வீடுகளிலும் மாட்டுத் தீவனப் படப்புகளிலும் தீ வைத்தார்கள். பக்கத்து ஊர்க்காரர்கள் கேலியாகப் பேசிக் கொண்டது போல், 'செவலைக் காளை' மேய ஆரம்பித்தது. அநேக வீடுகள் கரிக் கோட்டையாகி குட்டிச் சுவர்களாக நின்றன. காற்றுக் காலம் முடிந்த பின், காய்ப்புப் பருவத்தில் இருந்த மிளகாய்ச் செடிகளை வேரோடு பிடுங்கி எறிந்து, பல தோட்டங்களைப் பாழ்படுத்தினார்கள். காட்டு வேலைக்குப் பெண்கள் தனியாகப் போகமுடியவில்லை, ஆண்களும் ஆயுதங்கள் சகிதம்தான் தெரு விலேயே நடமாட முடிந்தது. திடீரென்று 'தீ' என்றோ, 'கொலை' என்றோ கூப்பாடு கேட்கும். எந்த நேரத்தில் என்ன நடக்கும் என்று சொல்ல முடியாது. மாதத்தில் இருபது நாள் ஊருக்குள் போலீஸ் நடமாட்டம். இப்படி ஊர் கந்தர் கோளமாகி, வயது முதிர்ந்தவர்கள் சொல்லியபடி 'கழுதை புரண்ட களமான பிறகு, ஊரெல்லாம் ஒன்றுகூடுவது எங்கே? அம்மனுக்குப் பொங்கல் இடுவது எங்கே? பொங்கல் நின்றுவிட்டது.

அதற்கு முன்னாலேயே சில மாதங்களாக நித்தியப்படி

பூசையும்கூட தடுமாறிப் போய்விட்டது. பூசாரி ஆறுமுகப் பண்டாரம், ஊராரிடம் அமுதுபடி (அரிசி) வாங்கி அம்மனுக்கு அன்றாடம் நைவேத்தியம் படைத்து, தம் மனைவி மக்களையும் காப்பாற்றி வந்தார். ஊர் இப்படி ஆனபிறகு, அவர் எதை வைத்துப் படைப்பார்? ஆகவே, குறித்த காலத்தில் மணி ஆட்டுவதுதான் பூஜை என்று ஆகிவிட்டது. நாளடைவில் விபூதி வாங்கிக் கொள்ளக் கூட கோவிலுக்கு யாரும் வராமல் போகவே பூசாரி மணியாட்டுவதையும் நிறுத்திவிட்டார். கோவில் கதவு அடைக்கப் பட்டுவிட்டது. பண்டாரம் கொஞ்சநாள் ஊரில் இருந்தார். சோற்றுக்கு வழியில்லை. பிள்ளை குட்டிகள் கஞ்சிக்குப் பறந்தன. என்ன செய்வது என்று தெரியாமல் இடிந்து போயிருந்த நேரத்தில், அரச மரத்தைப் பிடித்த சனி பிள்ளையாரையும் சேர்த்துப் பிடித்தது.

ஒரு கட்சியிலும் சேராமல் ஊருக்குப் பொதுவாக இருந்த பூசாரிப் பண்டாரத்தைப் பற்றி வடக்குத் தெருக்கட்சிக் காரர்களிடையே அகஸ்மாத்தாகச் சந்தேகம் உண்டாகி விடவே, அவரைத் தெற்குத் தெருவாசிகளின் கையாள் என்று எப்படியோ முடிவு செய்துவிட்டார்கள். நல்ல வேளையாக அந்தச் செய்தி அன்றே பூசாரிக்குத் தெரிந்துவிட்டது. ஒருநாள் தாமதித் திருந்தாலும் ஆறுமுகப் பண்டாரம் பலியாகி இருப்பார். அன்றிரவே வீட்டில்கூடச் சொல்லிக் கொள்ளாமல் பூசாரி எங்கோ ஓடி விட்டார். திட்டமிட்டு ஆயுதபாணிகளாக மறுநாள் காலையில் அவர் வீட்டுக்குள் நுழைந்த நாலைந்து பேர் வெறுங்கையுடன் திரும்பினார்கள். வந்ததற்கு மனச்சாந்தியாக இருக்கட்டும் என்று பூசாரியின் மனைவியையும் பிள்ளைகளையும் அடித்து மிதித்துப் படுக்க வைத்து விட்டு வெளியே வந்தார்கள்.

கலகத்துக்கு முக்கிய காரணஸ்தர்களாக விளங்கிய சுமார்

அறுபது பேரைப் போலீஸார் கைது செய்தனர். பத்துப் பன்னிரண்டு பேர் தலை மறைவாகி விட்டனர். ஊரிலும் ஐந்து கொலைகளுக்கு மேல் நடைபெறவில்லை. ஊர் கட்டுக்கடங்கி விட்டது.

மாரியம்மன் கோவில் திருவிழா நின்றாலும் நின்றது; பருவமழை பெய்வதும் நின்றுவிட்டது. காடு கரைகளில் விதைப்பதற்கு மழை பெய்யவில்லை. போதாக்குறைக்கு ஊருக்குள் வைசூரி வேறு புகுந்துவிட்டது. பாதி வீட்டுக் கூரைகளில் வேப்பிலை முடிச்சுக்கள். வாரத்துக்கு சராசரி இரண்டு பிரேதங்கள் தகனம், அக்கம் பக்கத்து ஊர்கள் இரண்டொன்றிலும் இதே கதைதான். கிழக்கே உள்ள கிராமத்துக்காரர்கள் பார்த்தார்கள்; தலைவன்குறிச்சி மாரியம்மனுக்குத் திருவிழா நடத்தாதது ஒன்றே இத்தனை சங்கடங்களுக்கும் காரணம் என்று முடிவு கட்டினார்கள். உடனே ஐந்தாறு பெரிய மனிதர்கள் அங்கிருந்து கிளம்பி தலைவன் குறிச்சிக்கு வந்து இங்குள்ள ஐந்தாறு கிழவர்களைக் கண்டு, “அம்மனுக்கு எப்போது பொங்கல் நடத்துவதாக உத்தேசம்?” என்று கேட்டார்கள்.

“பொங்கலாவது பூசையாவது! ஊர் இருக்கிற இருப்பில் பொங்கல் நடத்துற மாதிரியா இருக்கு?” என்று கைவிரித்தார்கள் தலைவன் குறிச்சிக் கிழவர்கள்.

“நீங்க என்ன இப்படிப் பேசுறீக? கால மழை பெய்யல்லே; ஊருக்குள்ளே பெரியம்மை வந்து காவு வாங்கிக்கிட்டிருக்கு. இதையெல்லாம் கண்ணாலே பார்த்துக் கிட்ட பிறகும், மாரியம்மனை நெனைக்க மாட்டேங்கிறீகளே, இதுக்கு என்ன அர்த்தம்? காலா காலத்தில பொங்கல் வச்சிருந்தா இத்தனையும் வந்திருக்குமா?” என்று கீழூர் முக்கியஸ்தர்கள் கேட்டார்கள்.

உடனே தலைவன் குறிச்சிக் கிழவர்கள், “நீங்க சொல்றது

வாஸ்தவம்தான் ஐயா, வாஸ்தவம்தான். ஆனா, ஊர் ஒண்ணு சேர்ந்தில்லே பொங்கல் வைக்கணும்! விடிஞ்சதும் ஒவ்வொருத் தனுக்கும் கோர்ட்டுக் கச்சேரிக்குப் போகவே நேரம் சரியாயிருக்கே. இதிலே பொங்கல் வைக்கிறது எப்படி? நீங்களே சொல்லுங்க" என்றார்கள்.

கொலைக் கேஸ்களுக்கெல்லாம் தீர்ப்புச் சொல்லப்பட்டு, ஊரும் திருந்தி ஒரு ஒழுங்குக்கு வந்தாலொழிய அவர்கள் பொங்கல் வைக்கப்போவதில்லை என்பது கீழூர்க்காரர்களுக்குத் தெரிந்து விட்டது, அப்படியானால் பொங்கல் நின்றுவிடுவதா? அம்மனுக்கு இன்னும் கோபாவேசத்தை அதிகமாக்குவதா?

கீழூர்க்காரர்களுக்கு ஒரு யோசனை தோன்றியது. ஒரு பெரியவர் தலைவன் குறிச்சிக் கிழவர்களைப் பார்த்துச் சொன்னார்: "சரி, நீங்க பொங்கல் நடத்த வேண்டாம்; நாங்க நடத்துறோம். நீங்க என்ன சொல்றீக?"

தலைவன்குறிச்சிக்காரர்களுக்கு ரோஷம் வந்து விட்டது. உடனே ஒரு பெரியவர், "என்ன ஐயா இது, ஒங்களுக்குத்தான் பேசத் தெரியும்னு நெனைச்சிப் பேசுறீகளா?" என்று கேட்டார்.

"கோவிச்சுக்காதீங்க. எப்படியும் சாமி காரியம் நடக்கட்டும்ணு தான் சொல்றோம்!"

"சாமி காரியமாவது, சாத்தான் காரியமாவது! ஊர் விட்டு ஊர் வந்து யாராவது எந்தக் காலத்திலாவது பொங்கல் நடத்தினது உண்டா, ஐயா? தலைவன்குறிச்சிக்காரங்க பைத்தியக்காரங்கண்ணு நெனைச்சித்தானே பேசுறீக? நீங்க பொங்கல் நடத்துறதாம், உள்ளூர்க்காரங்க பார்த்துக் கிட்டு நிக்கிறதாம்! சரிசரி, இந்தச் சமாச்சாரத்தை இன்னொரு தடவை சொல்லாதீங்க. போய்ட்டு வாங்க" என்று எழுந்து விட்டார் தலைவன்குறிச்சிப் பெரியவர்

ஒருவர். எவ்வளவு சமாதானப்படுத்தியும் அவரை உட்கார வைக்க முடியவில்லை. சந்திப்பும் பேச்சும் முடிந்தன. கீழூர்க்காரர்கள், "ஒங்க இஷ்டம்" என்று சொல்லிவிட்டு, மாரியம்மன் கோவிலுக்குப் போனார்கள். அம்மனை வணங்கினார்கள்.

"தாயே! நீதான் கண்ணு தெறக்கணும். இப்படி மழை தண்ணி இல்லாம அடிச்சா, நாங்க என்ன பண்ணுவோம்? ஒனக்கு நாங்க என்ன கொறை செஞ்சோம்? ஒண்ணுமில்லையே! எங்களை ஏன் இப்படிச் சோதிக்கிறே! ஊரே பேதலிச்சுப் போயிருக்கு..." என்றெல்லாம் சொல்லி, வைசூரியை நிறுத்தி, மழை பெய்விக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டு கீழூர்க்காரர்கள் போய் விட்டார்கள்.

மழையில்லாததால் தலைவன்குறிச்சியிலும் சுற்றுக் கிராமங் களிலும் விவசாயம் நடைபெறவில்லை. கூலி ஜனங்கள் சோற்றுக்கு வழியின்றித் தத்தளித்தார்கள். சிலர் குடி கிளம்பி தூரப்பகுதிகளுக்குச் சென்றார்கள். வைசூரியோடு வேறு பல நோய்களும் ஊருக்குள் புகுந்து விட்டன. மனிதர்களும் செத்தார்கள்; தீவனம் இல்லாமல் ஆடுமாடுகளும் செத்தன. இரு நூறு வீடுகளில் ஒரு நாலைந்து வீடுகளில்தான் நாள் தவறாமல் அடுப்புப் புகைந்தது. மற்ற வீடுகளில் உலை ஏற்றுவது, என்று, எப்பொழுது என்ற நிச்சயமில்லை. இத்தனைக் கஷ்டங்களுக்கும் இடையில் ஒரே ஒரு பிரச்னை மட்டும் தீர்ந்துவிட்டது. அதாவது கோர்ட் வழக்குகள் யாவும் பைசலாகிவிட்டன. மூவருக்குத் தூக்கு தண்டனையும் ஐந்து பேருக்கு ஜன்ம தண்டனையும் விதிக்கப்பட்டன. மற்றவர்களில் சிலருக்கு வெவ்வேறு கால அளவில் சிறைவாசங்கள். சிலர் விடுதலை யானார்கள்.

ஊருக்குள் ஒரு புதுவிதமான சூழ்நிலை நிலவியது. அதாவது தெற்குத் தெருவுக்கும் வடக்குத் தெருவுக்கும் இடையே பகைமையும்

இல்லை; சமாதானமும் இல்லை, அந்தத் தெரு அதுபாட்டுக்கு இருந்தது, இந்தத் தெரு இதுபாட்டுக்கு இருந்தது. விரோதங்களைப் பற்றி நினைக்காமல், பஞ்சத்தையும் நோய்களையும் சமாளித்து உயிர் பிழைப்பதிலேயே அனைவரும் குறியாக இருந்தார்கள்.

ஏறக்குறைய ஒரு வருஷம் கழிந்து விட்டது. அடுத்த பொங்கல் தினத்துக்கு ஒரு மாதம் ஒன்றரை மாதம் இருக்கும் போதே ஊரில் உள்ள சில கிழவர்கள் சேர்ந்து, எப்படியும் இந்த வருஷம் மாரியம்மன் கோவில் திருவிழாவை நடத்தியே தீரவேண்டும் என்று கங்கணம் கட்டினார்கள். இந்த வருஷமும் அம்மனைப் பட்டினி போட்டு விட்டால், ஊர் அடியோடு நாசமாகிவிடும் என்று சொல்லி எல்லோரையும் எச்சரித்தார்கள். இவர்களுடைய பிரயத்தனத் தினாலும், மழையின்மையாலும், ஊர் ஜனங்களின் பயத்தினாலும் திருவிழா நடத்த ஏற்பாடாயிற்று. முந்திய வருஷங்களை விடச் சிறப்பாகவே ஏற்பாடுகள் செய்யத் தொடங்கினார்கள். இவர்களுக்கு வேண்டிய பொருளுதவி செய்யவும், சரீரப் பிரயாசைப் படவும் பக்கத்து ஊர்கள் போட்டியிட்டுக் கொண்டு முன் வந்தன. விழா விமரிசையாக நடை பெறுவதற்குக் கேட்பானேன்?

பொங்கல் திருவிழாவுக்குச் சில தினங்கள் முன்னதாக மாரியம்மன் கோவிலை வெள்ளையடிப்பதற்காகத் திறந்தார்கள். திறந்து பார்த்தால்...? சொல்லமுடியாத பயங்கரம்! எல்லோரும் அதிர்ச்சி அடைந்து நின்றுவிட்டார்கள். அம்மன் சிலை சிங்க வாகனத்தில் என்றும் போலவேதான் அமர்ந்திருந்தது. ஆனால் அம்மனின் புடவையைக் காணோம். எண்ணெய்ப்பிசுக்கும், கருப்பு மெழுகும் படிந்து நிறம் மங்கித் தோன்றும் ஒரு சிவப்புப் புடவையுடனேயே அம்மன் காட்சி தருவது வழக்கம். எப்பொழுதோ யாரோ கும்பிட்டுச் சாத்திய சிவப்புச் சிற்றாடை அது. அதைக் காணவில்லை.

கோவிலுக்குள் புகுந்து யாரும் திருடியிருப்பார்கள் என்று நினைப்பதற்கும் இடமில்லை. மாரியம்மன் கோவிலில் திருட வேண்டுமென்று நினைத்து எமதர்ம ராஜா புகுந்திருந்தாலும் அவனுக்கு அங்கேயே நிச்சயம் கண் அவிந்திருக்கும். நாக்குத் தள்ளிச் செத்திருப்பான். அப்படியே யாரும் திருடித் தப்பித்து விட்டதாக வைத்துக் கொண்டாலும், அந்தப்புடவை யாரும் கட்டுவதற்கு லாயக்கற்ற கண்டாங்கி; சின்னஞ் சிறு துணி. பத்து வயதுப் பெண்ணுக்கும்கூட தாராளமாக விட்டு உடுத்தப் பற்றாது. மேலும், அந்த எண்ணெய்ப் பிசுக்கையும் மெழுகையும் போக்குவது என்பதும் சாமான்யமான காரியமல்ல. இத்யாதி காரணங்களைக் கருதி, திருட்டுப் போனதாக யாரும் சந்தேகிக்கவில்லை. அம்மன் தான் ஊர்க்காரர்கள் பூஜை போடாமல் விட்ட கோபத்தினால் ஏதோ செய்திருக்கிறாள் என்றும், அதன் மர்மம் அவளுக்குத்தான் தெரியும் என்றும் பேசிக் கொண்டார்கள். இருந்தாலும் ஓடிப்போன ஆறுமுகப் பண்டாரத்தின் மூத்த மகனை அழைத்து, "அம்மனோட சீலை எங்கடா? ஒனக்குத் தெரியுமா? என்று கேட்டார்கள்.

"தெரியாது" என்று அவன் தலையைக் குலுக்கி விட்டான்.

"அவனை ஏன் கேக்கிறீக? நான் அப்பவே சொல்லல்லே, அம்மன் தான் என்னமோ செய்திருக்கிறாள். போனது போகட்டும். ஆகவேண்டிய காரியத்தைப் பாருங்க" என்றார் ஒரு பெரியவர்.

கோவிலை வெள்ளையடிப்பதில் முனைந்தார்கள்.

சேலை காணாமல் போன செய்தி ஊரெல்லாம் பரவி விட்டது. 'இது என்ன துர்க்குறியோ? ஊருக்கு இன்னும் என்னென்ன கேடுகளோ?' என்றெல்லாம் எண்ணி எல்லோரும் கதி கலங்கிப் போனார்கள். அதனால் பொங்கலைச் சிறப்பாகச் செய்து அம்மனின் கோபத்தைத் தணித்து அவள் மனசைக் குளிர்விப்பது என்று

தீர்மானித்தவர்களாய் அவரவர் பங்கை முழுமூச்சோடு நிறை வேற்றிக் கொண்டிருந்தார்கள்.

சேலை காணாமல் போனதற்குக் காரணம் அந்த ஊரில் யாருக்கும் தெரியாது என்று சொல்ல முடியாது. இரண்டு பேருக்கு நிச்சயமாகத் தெரியும். மற்றொருத்திக்குச் சந்தேகாஸ்பகமாகத் தெரியும்.

பூசாரி ஆறுமுகப் பண்டாரத்தின் மனைவி ஒரு நாள் சொல்லி, அவளுடைய மூத்த மகன் நள்ளிரவில் ரகசியமாகப் போய்க் கோவிலைத் திறந்து அம்மனின் சேலையை எடுத்துக் கொண்டு வந்து அவளிடம் கொடுத்தான். அதை வாங்கி அவள் மானத்தைக் காப்பாற்றிக் கொண்டாள். எட்டாத துணியை எப்படியோ சுற்றிக் கொண்டாள். எண்ணெய்ப் பிசுக்கு போவதற்காக அதை அவள் வீட்டுக்குள்ளேயே துவைத்தபோது சாயம் போய்விட்டது. 'அதுவும் ஒருவகைக்கு நல்லதுதான்; யாருக்கும் அடையாளம் தெரியாது' என்று நினைத்து, உலர்த்தி உடுத்துக் கொண்டாள். அன்றிலிருந்து 'அம்மனுக்குச் செய்திருக்கும் இந்த அபசாரத்தினால் நமக்கு என்னென்ன கஷ்டங்கள் வருமோ?' என்று இரவும் பகலும் திகில்பட்டுக் கொண்டும் இருந்தாள். தூக்கத்தில் பல நாட்கள் புலம்பியிருக்கிறாள். வயிற்றுப்பசி, பிள்ளைகளின் பட்டினி, இவற்றோடு இந்தப் பயம் வேறு. கணவன் எங்கே போனான் என்று தெரியவில்லை. யாராவது ரகசியமாகக் கொலை செய்து புதைத்திருக்கலாம் என்று நினைத்து அழுது துடித்தாள். ஆனாலும், 'காணாதவன் தாலி கழுத்திலே" என்ற கணக்கில் மஞ்சள் கயிற்றைப் போட்டுக் கொண்டு இருந்தாள். வறுமை அவளை அணுஅணுவாக மென்று தின்றது. உயிர் மட்டும் போகவில்லை.

பூசாரியின் மனைவி சுற்றிக்கொண்டிருப்பது அம்மனின் சேலையாக இருக்கக்கூடும் என்று, கோவில் திறக்கப்பட்ட

நாளிலிருந்து அவ்வூர்ச் சலவைக்காரி காளிக்குச் சந்தேகம். ஊர்ப்புடவைகள் எல்லாமே எப்படி இருக்கும் என்று அவளுக்குத் தெரியும். அத்தனையையும் வெளுத்து, இனம் பார்த்து ஒவ்வொரு வருக்கும் கொடுத்தவள். அவள் கைபடாத புடவை பூசாரியின் மனைவி கட்டியிருப்பது ஒன்றுதான். ஒரு நாள் பேச்சுவாக்கில், "நீங்க என்ன இந்தச் சித்தாடையைக் கட்டிக்கிட்டுத் திரியிறீக?" என்று அவள் கேட்டுவிட்டாள்.

பூசாரியின் மனைவிக்குத் தூக்கி வாரிப் போட்டது. சமாளித்துக் கொண்டு, "எனக்கு இப்போ அது ஒண்ணு தான் கொறை! பேசாமல் போ. ஏன் என் வயித்தெரிச்சலைக் கிண்டுறே!" என்று சொல்லிவிட்டு மடமட வென்று அதிவேகமாக வீட்டுக்குள்ளே போய்விட்டாள்.

காளியின் சந்தேகம் ஊர்ஜிதமாகிவிட்டது. இதை வெளியிடுவது எப்படி? சலவைக்காரியாக இருந்து கொண்டு இந்த விவரத்தை நாலு பேரிடம் சொன்னால், நாலு பேருமே நம்பமாட்டார்கள். 'அம்மன் கோவிலில் திருடியிருந்தால் பூசாரியின் மனைவி இத்தனை நாள் உயிரோடு இருந்திருக்கமுடியாது. திருடியும் உயிரோடு இருக்கிறாள் என்றால், அம்மன் அப்புறம் வெறும் கற்சிலைதானே தவிர கிராம தேவதையல்ல. வெறும் சிலையாக மட்டும் அம்மன் இருந்திருந்தால், இந்த இரண்டு வருஷமும் மழையை நிறுத்தியிருப்பாளா? மாரியாத்தா வந்து குட்டி குறுமான்களையெல்லாம் வாரிக் கொண்டு போயிருப்பாளா?' என்றெல்லாம் சொல்லி, காளியின் முகத்தில் கரி பூசி அனுப்பிடு விடுவார்கள். ஆனாலும் உண்மையை, முக்கியமாக ரகசியத். த, வெளிப்படுத்தியாக வேண்டுமே! காளி தவித்தாள். சரி, பொங்கல் தினத்தன்று ஆவேசம் வந்து ஆடும்போது, மாரியம்மனாக மாறி உண்மையைக் கக்கிவிடுவது என்று மனசைச் சமாதானப்படுத்திக் கொண்டாள்.

திருவிழா கோலாகலமாக என்றும் காணாத விமரிசை களோடு கொண்டாடப்பட்டது.மேள தாளங்கள், வில்லுப்பாட்டு, கரக ஆட்டங்கள்...... இப்படி ஒரே கும்மாளம், சந்நிதி வாசலில் ஆயிரக்கணக்கான பானைகள் பொங்கி வழிந்தன. மூலைக்கு மூலை திடீர் திடீரென்று சிலருக்கு மாரியம்மன் சன்னதமாகி பம்பை மேளத்துக்கு இசைய ஆடினார்கள். மஞ்சள் பாலையும், பானகத்தையும் வாங்கி வாங்கிக் குடித்தார்கள். அக்கினிச் சட்டிகளோ எண்ணில் அடங்காதவை.

யார் யாரோ சாமியாடும்போது, ஒவ்வொரு வருஷத் திரு விழாவின் போதும் தவறாமல் ஆடும் காளிக்குச் சன்னதமாகாமல் இருக்குமா? வீட்டில் சாப்பிட்டுக் கொண்டிருந்தவள் திடீரென்று குரவையிட்டுக் கொண்டு விரித்த தலையோடு கோவிலைப் பார்த்து ஓடினாள்.

"காளி வந்துட்டா டோய்" என்று எல்லோரும்,எதிர்பார்த்தது நடந்து விட்டதைக் காணும் உணர்ச்சியோடு ஆர்ப்பரித்தார்கள்.

"காளிக்குச் சாமி வராமல் இராதே, இவ்வளவு நேரமும் அவளைக் காணமேன்னு நெனைச்சிக்கிட்டே இருந்தேன். வந்துட்டா" என்றும் ஒருவர் சொன்னார்.

மஞ்சளும் வேப்பிலையும் போட்டுக் கரைத்த ஒரு குடம் பச்சைத் தண்ணீரைக் காளியின் தலையில் கொட்டினார்கள். மட்டுக்கு மீறிய ஆவேசத்தோடு செந்தூள் பறக்க ஆடினாள் காளி. கூட்டத்தில் பெரும் பகுதி எல்லாத் தமாஷ்களையும் விட்டு, இந்தப் பக்கம் சாய்ந்துவிட்டது. மஞ்சள் பாலைக் குடித்தபின் ஆவேசம் சற்றுத் தணிந்து, ஆட்டத்தில் சாவதானம் பிறந்தது. சுற்றிச் சுற்றி வந்தாள் காளி.

ஒரு பெரியதனக்காரர் கும்பிட்ட கையோடு காளியைப் பார்த்து,"மாரியம்மா, எங்களை இப்படிச் சோதிச்சிட்டயே! இந்த

வருசமாவது மழை பெய்யணும், மாரித்தாயே!" என்று வேண்டினார்.

உடனே காளி படபடத்து, "மழையா? மழையா? மழையா?" என்று சீறினாள்; "கண்ணைக் குத்திருவேன், கண்ணைக் குத்திரு வேன், கண்ணைக் குத்திருவேன்" என்று உறுமினாள்.

"தாயே, செஞ்ச குத்தத்தை மறந்துறணும். ஒனக்கு நாங்க ஒரு எதிரியா? எங்களுக்கு நல்லாப் புத்தி குடுத்திட்டே இனி ஒனக்கு ஒரு குறையும் வைக்கமாட்டோம். ஒன் மக்களைக் காப்பாத்திக் குடு" என்று அவர் கும்பிட்டார்.

"பேசுறியா நீ? பேசுறியா?" என்று ஆத்திரத்தோடு சொன்ன காளி, அங்கிருந்து திரும்பி மறுதிசையில் ஓடினாள். உடனே திரும்பி வந்தாள். அப்புறம் பழையபடி வேறிடத்துக்கு ஓடும்போது, கூட்டத்தோடு கூட்டமாய் நிற்கும் பூசாரியின் மனைவியைப் பார்த்துக்கொண்டாள். உடனே அங்கேயே நின்றுவிட்டாள்.

"ஏய்! நிக்கிறியா நீ? எதிரே நிக்கிறியா?" என்று அவளை நோக்கிப் பாய்ந்தாள். கூட்டம் வழி விலகிக் கொடுத்தது.

பூசாரியின் மனைவியும் காளியும் எதிர் எதிராய் நின்றார்கள். ஊரார் அனைவரும் ஆச்சரியப்பட்டுக் கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

பூசாரி மனைவியின் புடவையைக் காளி கையால் பிடித்துக் கொண்டு, "என் கிட்டே திருடி நீ தப்பவா? என் சேலையைக் கட்டி அசிங்கம் பண்ணின ஒன்னை இங்கேயே பெலிவாங்குவேன்; இங்கேயே பெலி வாங்குவேன்......" என்று சொல்லவே, ஜனங்களுக் கெல்லாம் ஆவேசம் பிறந்துவிட்டது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு பத்திரகாளியாக மாறி, மொத்தமாகப் பூசாரி மனைவியைப் பார்த்துப் பாய்ந்தார்கள். அவள் செய்த அபசாரத்தினால்தான் ஊருக்கு இத்தனை கேடுகள் விளைந்தன என்று எண்ணி, அவளை

அங்கேயே, அம்மன் சந்நிதியிலேயே ரத்தப் பலி கொடுத்து ஊருக்கு நன்மை தேட வேண்டும் என்று துடித்தார்கள். இத்தனை கூட்டத்திலும், தெய்வத்தை மறக்காத ஒருவர் இருந்தார். அவர் கூட்டத்தைத் தடுத்து நிறுத்தி, "ஏய், என்னடா இது? சாமி குடுக்காத தெண்டனையா நீங்க குடுக்கப் போறீக? அம்மனே வந்து கையுங்களவுமாய்ப் புடிச்சாச்சி; இனி நீங்க எதுக்குடா குறுக்கே பாய்றீக? அவபாடு; அம்மன் பாடு" என்றார்.

வேறொருவர், "ஆமப்பா, அம்மன் பொறுப்பிலேயே விட்டிருங்க. எதையாவது செஞ்சி வச்சி, இன்னும் ஊரைக் கொண்டு போய் கோட்டுலே நிறுத்த வேண்டாம். கோட்டுக்குப் போனோமோ, குடியும் கெட்டதோ" என்று எதார்த்தபூர்வமாக எச்சரித்தார்.

அதனால் அலை கரை கடக்கவில்லை, மூர்த்தண்யம் கட்டுக்கு அடங்கி நின்றது.

பூசாரி மனைவி நடுங்கிவிட்டாள். காளியை சலவைக்காரியாக நினைக்காமல் மாரியம்மனாகவே அவளும் நினைத்தாள். அம்மன் பலி வாங்காமல் விடவே மாட்டாள்; அவள் விட்டாலும் ஊர் விடாது; எப்படியும் இனி உயிரோடு வீடு திரும்பமுடியாது என்பது உறுதியாகி விட்டது. அப்போது ஒரு கணம், 'வீடு திரும்பித்தான் என்னத்தை அனுபவிக்கப் போகிறோம்?' என்று நினைத்தாள். மறு கணம் 'கோயில் வாசலிலேயே உயிர் போகட்டும்' என்று முடிவு செய்தாள். அவ்வளவுதான், சில நிமிஷங்களுக்குள் பயமெல்லாம் போய், கோபமும் ஆங்காரமும் பிறந்துவிட்டன. பய நடுக்கம், கோபப் படபடப்பாக மாறியது. வலிய வந்த மாரியம்மனை சும்மா விடக் கூடாது என்று, 'மாரியம்மா! ஒனக்குக் கண் அவிஞ்சி போச்சா? நீ சாமியா? இல்லே குத்துக்கல்லா?" என்று இடிமாதிரி முழங்கினாள் பூசாரி மனைவி.

ஊரே இந்தத் துணிச்சலைக் கண்டு அதிர்ந்து போனது.

காளி மட்டும் நிலை கலங்காமல் "என்ன சொன்னே?" என்று கேட்டாள்.

"சொன்னேன், சோத்துக்கு உப்பில்லேன்னு...."

"கண்ணைக் குத்திருவேன்...."

"குத்து குத்து. அதுக்கெல்லாம் பயந்தவுக ஒருத்தரும் இல்லை. ஒனக்குக் காலமெல்லாம் பூசைபண்ணின என் புருசனைக் காப்பாத்திக் குடுக்க ஒனக்குச் சக்தியில்லே; நான் புள்ளைக் குட்டிகளை வச்சிக்கிட்டு ராப்பட்டினி கெடக்கிறதைக் கண்ணாலே பார்க்கல்லே; கடைசியிலே ஒரு முழத்துணிகூட இல்லாமே அடிச்சிட்டே; இப்ப என்னடான்னா கண்ணைத் குத்துறேன் மூக்கைக் குத்துறேன்னு உறுமுறே! செய், உனக்குத் தெரிஞ்சதை எல்லாம் செய், இனிமே என்ன?"

"என் சீலையை நீ கட்டலாமா? வேறு என்னத்தைக் கெட்டுவேன்? சாமி கிட்டே திருடுற கதிக்கு எங்களை ஆளாக்கி யிருக்கிறயே, நான் வேறே என்னத்தைக் கெட்டுவேன்? சொல்லு."

பூசாரி மனைவி எதற்கும் பயப்படாமல் எதிர்த்துப் பேசுவது, காளிக்குப் பெரிய மலைப்பை உண்டு பண்ணிவிட்டது. ஊரறிய அவமானப்பட அவள் விரும்பவில்லை. உடனே தலைவிரிகோல மாக பூமியதிரக் குதித்துப் பெருங்கூச்சல் போட்டாள்.

அம்மனின் கோபாவேசத்தைக் கண்டு ஊர் நடுங்கிக் கொண்டிருந்தது.

"ஏண்டி என் சீலையைக் கெட்டினே? ஒன்னை இங்கேயே, பலி வாங்குறேன், பாரு" என்று காளி கத்தவே, "எனக்கு வேறு சீலையில்லே. அதுனாலேதான் கெட்டினேன்" என்றாள் பூசாரி மனைவி.

இவ்வளவு காலமும் அவளைச் சுட்டெரித்த வறுமைத் தீ இப்பொழுது சாமி உட்பட அண்டியவர்களையெல்லாம் நோக்கி ஜ்வாலை வீசியது. மற்றவர்களின் கோபாஸ்திரங்கள் எல்லாம் பாய முடியாதவாறு அவளுக்கு அந்த அக்கினியே கவசமாக இருந்து உதவ ஆரம்பித்து விட்டது!

காளி ஓடிவந்து அவள் மீது பாய முயன்றபோது, பூசாரி மனைவி அவ்விடத்தை விட்டு ஒரே ஓட்டமாக ஓடி விட்டாள். அவளுடைய பிள்ளைகளும் அலறிக்கொண்டே அம்மாவைப் பின் தொடர்ந்து ஓடின. ஓடியவர்கள் ஓடியவர்கள்தான். அப்புறம் ஊர் திரும்பவே இல்லை.

காளிக்கு மானம் பிழைத்தது. ஊராரும் அம்மனை வேண்டி, கோபத்தைத் தணிக்கச் சொல்லி, ஒரு செம்பு மஞ்சள் பாலைக் கொடுத்து நெஞ்சைக் குளிர்வித்தார்கள்.

சாமி மலையேறிவிட்டது. காளி, வெறும் சலவைக்காரி காளியாக மாறி, மூச்சு வாங்கிக் கொண்டே ஒரு ஓரத்தில் போய் உட்கார்ந்துவிட்டாள்.

ஓடிப்போன பூசாரி மனைவி ஒரு சில தினங்களுக்குள் தூரத்து ஊரில் தன் கணவனைச் சந்தித்துவிட்டாள். அப்புறம், மாரியம் மனுக்குச் செய்த அபசாரத்தை எண்ணித் திரும்பவும் பயப்பட ஆரம்பித்தாள். பயம் முற்றி பைத்தியம் கூடப் பிடித்து விடும்போல் இருந்தது. பூசாரி ஆறுமுகப் பண்டாரம் ஒரு வருஷம் கழித்து தலைவன்குறிச்சிக்குத் திரும்பி வந்தார். வந்து மாரியம்மனுக்கு ஒரு செம்பட்டுச் சாத்திய பிறகுதான், அவளுக்கு பயம் நீங்கியது.

